கெடாமனு மவற்றை வகுத்துப் பூணல் வேண்டும். இவற்றிற் கெல்லாம் நதியே முதற் காரணமாக வேண்டிற் றென்றஃ திலதாயிற் கற்றதுசொல் ...ந் தன்னைக் கொல்வதற் கேதுவாக நிற்கும் பித்தனைப் பிடித்தவாளே யொக்கு மென்மனார் புலமையின் மிக்கோரெனக் கண்டுகொள்க. எ-று (சுசு)

**370.** எந்நூ னிலையினு மியைபெலா முணர்ந்து
மந்நூ லரியதென வஃ தினு மொருநூல்
காட்டிய பலநடைக் கடைபிடித் தவற்றொடு
கூட்டிய மற்றவை கொள்ப நல்லோரென
வெழுத்துச் சொற்பொருள் யாப்பணி யென்றிவண்
வழுத்திய வைம்பொருள் வழக்கஞ் சுருக்கித்
தொன்னூ னடையொடு சிறந்த புறநிலைப்
பன்னூ னடையிற் பழையன கழிதலும்
புதியன புகுதலும் புலமையின் மிக்கோர்
விதியென விம்முறை விரும்பி வழுவில்
முந்நூல் விளக்கிய முத்தமிழ்த்
தொன்னூல் விளக்கந் துலங்கிய வாறே.

(இ-ள்.) எவ்வகைநூலினு மவ்வவற்றுரியன வெல்லாவற்றையு முழு துணர்ந்த திறவது முற்றுணர்ந் தோர்க்கு மேலாவருமையாகையி னிங்கனு ...த்தவைப் பற்றுக்கோடாகக் கொண்டுணரா தனவு முணர்வ தறிவோர் தொழிலெனக் கொள்க. அன்றியுந் தொன்னூலை விளக்கிய புதுநூலாக வீண்டுச் சொல்லப்பட்ட வைந்திலக்கணவழியே தொன்மையிற் செந்தமிழ் நூலில் வழங்கிய சிற்சில வொழிபயினு மின்று மந்நூலிற் புதியன சிற்சில விதிபயினு மவையெல்லாங் காலவேற்றுமையானும் புறநிலை நூலின் வழி வந்தமையானும் வழுவென் றிகழப்படாவென நன்னூற் கலைவல் லோன் முதற் றொன்னூற் புலவருள்ளும் பலரொன்றுணர்க எ-று. (சரு)

இரண்டாமோத்துப் பொருளணியியல் —முற்றிற்று.

அதிகார மொன்றிற்கு ஓத்திரண்டிற்கு ஆ. சூத்திரம். 70.
மேற்கோள் சூத்திரம். 56. ஆ. சூ. 126.
அதிகார மைந்திற்கு மேற்கோளோடு கூடிய ஆ. சூத்திரம். 829.

—— o ——

ஐந்தாவது—அணியதிகாரம் —முற்றிற்று.